[21st January 1961

*Corruption Enquiry Committee*

* 42 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN : கனம் முதல் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

லஞ்ச ஊழல் விசாரணைக் கமிட்டியில் ஒரு மெம்பராக உள்ள சென்னை அட்வகேட் ஜெனரலை மத்திய சர்க்கார், சென்னை சர்க்காரைக் கலந்து நியமித்தார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : லஞ்ச ஊழல் விசாரணைக் கமிட்டி, மத்திய அரசாங்கத்தால் அமைக்கப்பட்டதல்ல. ஆகவே சென்னை சர்க்காரைக் கலந்து மத்திய சர்க்கார் நியமனம் செய்தார்களா என்ற கேள்விக்கு இடம் இல்லை.

SRI S. M. ANNAMALAI : இந்த லஞ்ச ஊழல் விசாரணைக் கமிட்டி மாநில அடிப்படையில் ஏன் அமர்த்தக்கூடாது. அதிகாரிகளின் லஞ்ச ஊழல்கள் எங்கு பார்த்தாலும் இருப்பதால் ஏன் நம் மாநிலத்திலும் ஒரு கமிட்டி அமைக்கக்கூடாது ?

THE HON. SRI C. SUBRAMANIAM : எங்கு பார்த்தாலும் லஞ்ச ஊழல் என்று சொன்னால், சபையில் இருக்கும் அங்கத்தினருக்குக்கூட பாதகம் ஏற்படும். ஆகையால் அப்படிச் சொல்ல வேண்டாமென்று கேட்டுக்கொள்கிறேன்.

*Education of the dumb*

* 43 *Q.*—SRI P. G. MANICKAM : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) 1960-ல் சென்னை ராஜ்யத்திலே ஊமையர்களின் கல்வி, தொழில் அபிவிருத்திக்காக எத்தனை பள்ளிக்கூடங்கள் (1) அரசாங்கத்தாராலும், (2) தனிப்பட்டவர்களாலும் நடத்தப்பட்டு வருகின்றன ?

(இ) எத்தனை பேர்களுக்குப் பயிற்சி அளிக்கப்பட்டு வருகிறது ?

THE HON. SRI C. SUBRAMANIAM :

| | | |
|---|---|---|
| (*a*) | Government Schools ... ... ... | Nil. |
| | School under Local Bodies ... ... ... | 2 |
| | Private Schools ... ... ... ... | 3 |

All these five schools are schools for the Deaf and Dumb offering general education with pre-vocational bias. There are no separate schools for the Deaf and the Dumb exclusively for imparting vocational training.

(*b*) The number of pupils receiving general education as on 31st March 1960 was as follows :—

| | |
|---|---|
| Boys ... ... ... ... ... | 425 |
| **Girls** ... ... ... ... ... | **387** |